Regd: No. TN - MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People MADRAS Phone: 420212 4 பக்கம் விலை 80 காசு
POST WITHOUT PRE-PAYMENT LICENCE No: G-6 TN-MS (C)P. P. 55

என் ஆசை

ஏழைகளுக்கு சேவை செய்ய வேண்டும் என்பதே என் உள்ளத்தின் அத்தியந்த ஆசை அதனால்தான் அவர்களில் ஒருவனாக என்னை ஆக்கிக்கொள்ள முடிந்தது.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்




மலர் 12 | சென்னை 25-2-1988 வியாழன் | வெளியூர் 26-2-1988 வெள்ளி | இதழ் 129

★ மககளவையில் பூட்டாசிங் கூறியது கற்பனை கலந்த பொய்

★ மாண்பும், பெருமையும்மிக்க மக்களவையில் மிக உயர்ந்தபொறுப்பில் உள்ளவர் கண்ணியம் மிக்கஒருவர் அற்பமான அரசியல்காரணங்களுக்காகபழிசுமத்துவது துரதிர்ஷ்டவசமானது: கடுமையான கண்டனத்திற்குரியது. கட்டுக்கதைகளை ஈவு இரக்கமற்ற பழிச்சொற்களை மக்களவையிலேயே கூறுவதா?

# பூட்டாசிங்கின் பொய்க்கு அன்னையார் கடும் கண்டனம்

அனைத்திந்திய ஊமைகள் சங்க மாநிலத் தலைவர் ஏ. கே. கண்ணன் மற்றும் திரளான தாய்மார்கள் அன்னையைச் சந்தித்து ஆதரவு தெரிவித்தனர்.

சென்னை, பிப். 25- மாண்பும், பெருமையும் மிக்க மக்களவையில் மிக உயர்ந்த பொறுப்பில் உள்ள கண்ணியம்மிக்க ஒருவர் அற்பமான அரசியல் காரணங்களுக்காக என்மீது களங்கம் ஏற்படுத்த சிறிதுகூட உண்மையற்ற கற்பனையான பழியைச் சுமத்துவது துரதிர்ஷ்டவசமானது. கடுமையான கண்டனத்திற்குரியது. இவையனைத்தும் கட்டுக்கதை-முழுப்பொய்-ஈவு இரக்கமற்ற பழிச்சொல் என்று கழகத் தலைவர் அன்னை ஜானகி எம். ஜி. ஆர்: ஆவேசமானக் குரலில் கண்டனம் தெரிவித்துள்ளார்.

தமிழகத்தில் புரட்சித் தலைவரின் அரசைக் கலைத்துகுடியரசுத்தலைவர் ஆட்சியை பிரகடனப் படுத்தியதை மக்களவை ஏற்றுக் கொள்வதற்காக நடைபெற்ற விவாதத்திற்கு பதில் அளித்த உள்துறை அமைச்சர் திரு. பூட்டாசிங் அவர்கள் மீண்டும் திட்டமிட்ட பழியை என் மீது சுமத்தி உள்ளதற்கு மிகுந்த வருத்தத்துடன் கண்டனத்தை தெரிவிக்க கடமைப் பட்டிருக்கிறேன்.

## கற்பனை கலந்த பொய்

முன்பே ஒரு முறை இந்த பழியை திரு. பூட்டாசிங் சுமத்திய போது கடுமையான உணர்வோடு மறுத்திருக்கிறேன் ஆனால் இந்த முறை பூட்டாசிங் அவர்கள் மேலும் கற்பனைக் கலந்த பொய்யை திட்டமிட்டு மக்களவையில் தெரிவித்துள்ளார்.

## பெருமைக்கு இழுக்கு

மாண்பும், பெருமையும் மிக்க மக்களவையில் மிக உயர்ந்த பொறுப்பில் உள்ள கண்ணிய மிக்க ஒருவர் அற்பமான அரசியல்காரணங்களுக்காக என் மீது களங்கம் ஏற்படுத்த சிறிது கூட உண்மையற்றகற்பனையான பழியை சுமத்துவது "துரதிர்ஷ்டமானதாகும்" கடுமையான கண்டனத்திற்குரியதாகும்

நம்பிக்கை வாக்கெடுப்பு

நாளான ஜனவரி 28ம் தேதிக்குமுதல்நாள், நாங்கள் காங்கிரஸ் கட்சி உட்பட மற்ற கட்சிகளின் ஆதரவைப் பெற வற்புறுத்துதல் முயற்சியில் ஈடுபட்டதாகவும், ஏன் இப்படி செய்கிறீர்கள் என்று திரு. பூட்டாசிங் என்னைக் கேட்டதாகவும், அதற்கு சில தொழில் அதிபர்களும் அதிக ஆர்வம் கொண்ட சில ஆதரவாளர்களும் ஈடுபட்டார்கள் என்று நான் சொன்னதாகவும் மக்களவையில் திரு பூட்டாசிங் கூறியுள்ளார்.

## கட்டுக்கதை இரக்கமற்ற பழிச்சொல்

இவை அத்தனையும் கட்டுக்கதை முழுப்பொய் ஈவு இரக்கமற்ற பழிச்சொல் என்பதை தெரிவிக்க கடமைப் பட்டிருக்கிறேன்.

திரு.பூட்டாசிங் மிக உயர்ந்த இடத்தில் இருப்பவர். மிகுந்த சிறப்பு மிக்கவர் நான் மிக சாதாரண பெண்தான். ஆனால் தர்மத்தின் காவலன் புரட்சித்தலைவரின் அடியொற்றிய வாழ்க்கைத் துணைவி என்பதையும் புதிய வரலாறு படைத்துக் கொண்டிருக்கும் புரட்சித்தலைவரின் புனித சக்தியாம் அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தின் தலைமைப் பொறுப்பை காலத்தின் கட்டளையால் ஏற்றுக் கொண்டிருக்கிற எளிய பெண்மணிதான் என்பதையும் அவர்களுக்கு மீண்டும் நினைவு படுத்த வேண்டிய கட்டாயத்திற்கு உள்ளாக்கப்பட்டுள்ளேன்.

ஏனெனில் என்னை அவர் தொலைபேசியில் தொடர்பு கொண்டதாகத் தெரிவித்திருக்கிறார்.

## தவறு-முழுப்பொய்

அதுவே, தவறு முழுப் பொய் ஜனவரி 27ம் தேதி பகல் இரண்டு மணி அளவில் நான்தான் தொலைபேசியில் தொடர்பு கொண்டேன் முதலில் தொலைபேசியில் அவர் கிடைக்கவில்லை இரண்டு முப்பது மணிக்குமேல் கிடைத்தார்.

அப்பொழுதும் அவர்தொலைபேசியில் பிரதமரின் முடிவில் எவ்வித மாற்றமும் இல்லை. கவலைப்பட வேண்டாம் என்றுதான்சொன்னார், எங்களுடைய கட்சியின்மூத்த தலைவர்கள் எல்லாம் கூட இருந்தார்கள். எந்த சந்தேகமும் வேண்டாம் என்று இவ்வளவுபெரியவருடைய உறுதி மொழிகளை நம்பி அவர்களுக்கு சமாதானம் கூறி அனுப்பினேன்.

## மக்கள் முடிவுக்கு

ஆனால் திரு.பூட்டாசிங் அவர்கள், நடந்தவைகள் அனைத்தையும் அப்படியே மாற்றி கற்பனைக் கதையை மக்களவையில் கூறி இருப்பது நியாயமா என்பதை பொது மக்களின் முடிவுக்கே விட்டுவிடுகிறேன்.

மேலும் திரு. பூட்டாசிங் அவர்கள் முன்பு கூறிய பழிச்சொல்லில் இருந்து இப்பொழுது ஒரு மாற்றம் தெரிகிறது காங்கிரஸ் கட்சிக்காராகளை விலைகொடுத்து வாங்க முயற்சித்தோம் என்றகுற்றச்சாட்டை மாற்றி இப்பொழுது காங்கிரஸ் உள்பட மற்ற கட்சிகளின் ஆதரவைப்பெற வற்புறுத்துதல் முயற்சியில் ஈடுபட்டோம் என்று ஓரளவு பெரிய மனது வைத்து குற்றச்சாட்டின் கடுமையைக் குறைத்து கூறி உள்ளார் அதற்காக அவருக்கு நான் நன்றி தெரிவிக்க கடமைப் பட்டுள்ளேன்.

ஆனாலும் நடக்காதஒன்றை என் மீது பழியாக சுமத்தி இந்திய துணைக்கண்டத்தின் மிக உயர்ந்த மாண்புமிக்க அவையில் திரு. பூட்டாசிங் அவர்கள்கூறியது மிகவும் துரதிர்ஷ்ட வசமானதுகண்டனத்திற்குரியது என்பதைமீண்டும் தெளிவுபடுத்த விரும்புகிறேன்.

இவ்வாறு அன்னை ஜானகி எம்ஜிஆர் தனது அறிக்கையில் கூறியுள்ளார்.

## சி எஸ் ஜெயராமனை பார்த்தார் ஜானகி எம்ஜிஆர்

சென்னை, பிப். 25- பிரபல பின்னணி பாடகர் சிதம்பரம் சி. எஸ். ஜெயராமன்உடல்நலமின்றி பொது சென்னை மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வருகிறார்.

கழக தலைவர் அன்னை ஜானகி எம்ஜிஆர் மருத்துவ மனைக்குச்சென்று சிதம்பரம ஜெயராமனைப் பார்த்து நலம் விசாரித்தார்.

ரெயில்வே - தபால் தந்தி கட்டணம் 1171 கோடி உயர்வு அநியாயம்:

ஏழைகளை துன்புறுத்தும்

# மோசமான நடவடிக்கை

## அன்னை ஜானகி எம்ஜிஆர் கண்டனம்

சென்னை,பிப்.25-ரெயில்வே தபால் தந்திகட்டணங்களை உயர்த்தியிருப்பது ஏழை,எளிய நடுத்தர மக்களை வெகுவாகப் பாதிக்கும் அவர்களை மேலும் வறுமைக்கு உள்ளாக்கும் ரெயில்வே பட்ஜெட் ஒருமோசமான பொருளாதார நடவடிக்கையாகும் என்று ஜானகி எம் ஜி ஆர் கண்டனம் தெரிவித்துள்ளா

மத்திய அரசு எவ்வளவு மோசமான பொருளாதார நெருக்கடிக்கு நாட்டை கொண்டு செல்கிறது என்ப... கற்கு ரயில், தபால் கட்டண உயர்வு சான்றாக அமைந்துள்ளது.

## 1171 கோடி உயர்வு?

பொது மக்களின் இன்றியமையாத தேவைக்காக சேவைபுரிய வேண்டிய துறைகளான ரயில்வே, தபால் தந்தி துறைகளின் மூலம் ரூபாய் 1,171 கோடிக்கு கட்டணங்களை உயர்த்தி இருப்பது ஏழை நடுத்தர மக்களின்வாழ்க்கை சுமையை மேலும் கடுமையாக அதிகரிக்கும் செயலாகும்.

## பாவம் மக்கள்

வறுமையோடு போராடி, வளர்ச்சியை பெற வேண்டிய இந்தியா போன்ற ஒரு மக்கள் தொகை அதிகமுள்ள ... தேவைகளுக்காக, துயரப்படும் ஏழை நடுத்தர மக்கள் மீது இந்தியஅரசு ரயில், தபால் கட்டண உயர்வு என்ற பெயரில் சுமார் 1200 கோடி ரூபாயை சுமத்தி இருப்பது கண்டனத்திற்குரியது

இவ்வளவு கட்டண உயர்வு செய்துசுமார் 1200கோடிக்கு சுமை ஏற்படுத்தியும். சென்னை நகர, துரித ரயில் போக்குவரத்திற்கு ரூபாய் 9 கோடி தான் ஒதுக்கப் பட்டுள்ளது.

## தமிழகம் புறக்கணிப்பு

டெல்லியின் பார்வையில் தமிழகம் எப்படிபுறக்கணிக்கப்பட்டு வருகிறது என்பதற்கு இது ஒரு எடுத்துக்காட்டாக அமைந்துள்ளது.

எனவே இவ்வளவு பெரிய கட்டண உயர்வு சுமையை ஏழை நடுத்தர மககள் மீது சுமத்துவது மக்களுக்கு நன்மை செய்வதற்கு அல்ல என்பதும் வேறு எந்த செலவுகளையோ சரிக்கட்டுவதற்காகவும் தான் இந்த 1200 கோடி ரூபாய் என்பதையும்புரிந்து கொள்ள முடிகிறது.

தவறான கொள்கைகள் மூலம்ஒருகடுமையான பொருளாதார சுமையை ஏழைநடுத்தர மக்கள் மீது சுமத்தி, ஏழை-நடுத்தர மக்களைமேலும் வறுமைக் குள்ளாக்கும் ஒரு மோசமான பொருளதார நடவடிக்கை இந்த ரயில்வே பட்ஜெட் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

இவ்வாறு அன்னை ஜானகி எம். ஜி. ஆர். தமது கண்டனத்தை தெரிவித்துள்ளார்

# ஜனாதிபதி - மொரார்ஜி தேசாய் சந்திப்பு

பம்பாய், பிப். 25- முன்னாள் பிரதமர் மொரார்ஜிதேசாயின்இல்லத்திற்கு ஜனாதிபதி ஆர். வெங்கட்ராமன் இன்று (வியாழன்) பிற்பகல் சென்று நலம் விசாரித்தார்.

இரு தலைவர்களும் 15 நிமிட நேரம் தனியேமகிழ்ச்சியுடன் உரையாடியதாகவும் பரஸ்பரம் வாழ்த்துக்களை தெரிவித்துக் கொண்டதாகவும் தேசாயின் மகன் கூறினார்.

ஜனாதிபதியுடன் அவரது மனைவி ஜானகி அம்மையார் மராட்டிய முதல்வர் எஸ்.பி சவான் அவரது மனைவி குஸ்மதி சவான் ஆகியோர் சென்றிருந்தனர்.

"பிளிட்ஸ்,, ஆசிரியர் ஆர் கே.கரஞ்சியாவின் 75 வது பிறந்தநாள் விழாவில் கலந்து கொள்ள ஆர். வி பம்பாய் வந்துள்ளார்.



கார்க்கி கட்டுரை நாளை.

நெடுஞ்செழியனின்அர்த்தமற்ற-ஆதாரமற்றகுற்றச்சாட்டுகட்கு

# மூத்ததுணைப் பொதுச் செயலாளர் சுடசுட பதில்

"உண்மையா? பொய்யா? நேரடியாகச் சொல்

சென்னை பிப்25- ஓடுகாலி கும்பலுடன் ஐக்கியமானதால் நாளுக்கொரு அறிக்கையும் வேலைக்கொரு சவாலும் விட்டு வரும் நெடுஞ்செழியனின் பொய்மைவாதத்தின் முதுகெலும்பைமுறிக்கும் வகையில்கழகத்தின் மூத்த துணைப் பொதுச் செயலாளர் எஸ் இராகவானந்தம் பதிலடி கொடுத்துள்ளார்

இராகவானந்தம் வெளியிட்டுள்ள அறிக்கையில் கூறியிருப்பதாவது:-

நமது இதயதெய்வம் புரட்சித்தலைவரால் அமைக்கப்பட்ட ஆட்சியை கவிழ்த்தது சரி என்று நாவலர் அவர்கள் வாதிட்டு மகிழ்ச்சி தெரிவித்துள்ளார்கள் சட்டமன்றத்தில் நடைபெற்ற குழப்பம் சபை ஒத்தி வைக்கப்பட்டது நம்பிக்கை வாக்குக்கோரும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது ஆகிய காரணங்களைக் காட்டித் தான் ஆட்சி கலைக்கப்பட்டதாக நாவலர் வாதிட்டுள்ளார்கள்.

## உண்மையா? இல்லையா?

சட்டமன்றம் கூடியவுடன் நடிகர் திலகம் சிவாஜி கணேசன் ஆதரவு பெற்ற 5 காங்கிரஸ்சட்டமன்றஉறுப்பினர்கள் அன்னை ஜானகி எம் ஜி ஆர் ஆட்சியைக் கவிழ்க்கதாங்கள் உடன்படவில்லை: அதற்காகத் தங்கள் பதவிகளை ராஜினாமா செய்கின்றோம் என்று அறிவித்தது உண்மையா இல்லையா? இந்தசெய்தியை அறிவித்தவுடன் காங்கிரசுக் கட்சியினர் கூச்சல் குழப்பம் போட்டது உண்மையா இல்லையா? அந்தஐந்துசட்டமன்ற உறுப்பினர்களைசட்டமன்றத்திற்குள்ளேயே தாக்கியது உண்மையா இல்லையா?

## 'மைக்கு'களை பிடுங்கி அடித்தாயா? இல்லையா?

மீண்டும் சபைகூடியவுடன் கட்சித்தாவல் சட்டப்படி நாவலர் அவர்களையும் மற்ற 5 பேர்களையும் பதவிநீக்கம் செய்து பேரவைத் தலைவர் அறிவித்தவுடன் சபையில் கூச்சல் குழப்பம் செய்து மைக்குகளைப் பிடுங்கி அடித்துக்கொண்டது உண்மையா: இல்லையா?

காங்கிரசுக் கட்சி சட்டமன்ற உறுப்பினர் சிவராமனை பேரவைத்தலைவராகத் தேர்ந்தெடுத்து, அன்னை ஜானகி எம்ஜிஆர் ஆட்சியை பதவி நீக்கம் செய்ததாக அறிவித்து, பிறகு பேரவைத் தலைவரையும் பதவி நீக்கம் செய்ததாக அறிவித்து சட்டமன்ற விதிகளுக்கு முரணாக நாவலர் ஆதரவாளர்களும் காங்கிரசுக் கட்சியினரும் நடந்தது உண்மையா, இல்லையா? இவ்வாறு பதவி நீக்கம் செய்ததைஆளுநரிடம் கூறி அவரது ஆதரவைப் பெற முயற்சித்த நிகழ்ச்சிகள் உண்மையா. இல்லையா?

பிற்பகல் 3 மணிக்கு சபை கூடியபோது நாவலர் அவர்களும் பதவி நீக்கம் செய்யப்பட்ட மற்ற உறுப்பினர்களும் காவலர்களைத் தள்ளி விட்டு சபைக்குள் நுழைந்தது சட்டமன்ற விதிகளுக்கு முரணான சட்ட விரோதச் செயலா இல்லையா?

## இதயதெய்வம் படம் உடைப்பு

பேரவைத்தலைவர் தன் இருக்கைக்கு வந்தவுடன் காங்கிரசுக் கட்சி உறுப்பினர்கள் அவரை தாக்கி, அவர் முன் இருந்த மேஜையைத்தள்ளி புரட்சித்தலைவர் படத்தை உடைத்து, நாற்காலியைத் தூக்கி பேரவைத்தலைவர் மீது வீசியது உண்மையா. இல்லையா?

நாவலரசு ஆதரவ சட்டமன்ற உறுப்பினர் பாப்பா சுப்பிரமணியம் ஓடிவந்துமற்றொரு நாற்காலியைத் தூக்கி பேரவைத் தலைவர் மீது வீசியது உண்மையா இல்லையா? நாவலர் ஆதரவு சட்டமன்ற உறுப்பினர்கள் 3 பேர் மைக்குகளை பிடுங்கி தாக்குதல் நடத்திவிட்டு மைக்குகளை கைகளில் எடுத்துக்கொண்டு வெளியே சென்றது உண்மையா இல்லையா? மேற்குறிப்பிட்ட எல்லா வன்முறைச் செயல்களும் நடந்த பிறகுதான் சபைத் தலைவர் அமைதிக் காக்க சபையை ஒத்தி வைத்ததும், சபையில் பேரவைத் தலைவரையும், மற்ற உறுப்பினர்களையும் தாக்கியவர்கள்மீது நடவடிக்கை எடுத்து சபையில் அமைதியை நிலைநாட்ட காவல்துறை கமிஷனருக்கு ஆணையிட்டதும் நடந்தது.

## கேவலம் கேவலம்

சட்டமன்றத்தை ஒத்தி வைத்ததற்காக சட்ட மன்ற உறுப்பினர்கள் கூச்சல் குழப்பம் செய்ததற்காக சட்டமன்றத்தையே கலைக்கலாம் என்று நாவலர் வாதிட்டிருப்பது ஜனநாயக ஆட்சி முறையையேகேவலப்படுத்துவதாகும்.

சபையில் அமைதிஏற்பட்டவுடன் நடந்த நம்பிக்கை கோரும் வாக்கெடுப்பில் தங்கள் பெரும்பான்மையை காங்கிரஸ் கட்சி நாவலர் ஆதரவு உறுப்பினர்கள் நிரூபித்திருக்கலாம் அல்லது மறுநாள் நம்பிக்கை இல்லாத் தீர்மானம் கொண்டுவந்து நிறைவேற்றி இருக்கலாம் இத்தகைய ஜனநாயக விதிமுறைகள் இருக்கும் போது மத்திய அரசின் உதவியோடு ஆட்சியைக்கலைத்ததில் பெருமையும் மகிழ்ச்சியும் அடையும் நாவலர் கூட்டத்தின் பதவி வெறியை தமிழக மக்கள் [illegible] உணர்ந்துள்ளார்கள் [illegible] புரட்சித்தலைவர் [illegible]

இருந்த அமைச்சர்களை மட்டும் வைத்துக்கொண்டு நாவலர் முதலமைச்சராகச் செயல்பட ஆதரவு கொடுத்திருந்தால் ஆட்சி கலைக்கப் பட்டிருக்காது என்று நாவலர்கூறியுள்ளார்.

## கவர்னரின் உத்தரவை படித்தாயா?

நாவலரை முதலமைச்சராக்கிஉத்தரவிட்ட ஆளுநரின் உத்தரவையே படிக்காத நாவலர்தான் இதுபோன்று கூறுகிறார் "அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகச் சட்டமன்றக் கட்சிகூடிபுதிய தலைவராகத் தேர்ந்தெடுக்கும் வரை அமைச்சரவையில் மூத்த அமைச்சராக பணியாற்ற நாவலா அவர்களை முதலமைச்சராக இடைக்காலமாக நியமிக்கிறேன்' என்ற ஆளுநரின் உத்தரவு தெளிவாகியுள்ளது.

## பொய்யே புரட்டே

கழகசட்டமன்ற கட்சிக் கூட்டத்தை ஜனவரி 1,2,3 தேதிகளில் நடத்தி தலைவரைத் தேர்த்தெடுக்கலாம் என்று தேதிகளைக் கூறியவரே நாவலர் அவர்கள்தான் தங்களுக்கு பெரும்பான்மை கழகசட்டமன்ற உறுப்பினர்கள் இல்லை என்பதால் நாவலரே கூட்டும்படி கூறிய கழக சட்டமன்ற கட்சி கூட்டத்திற்கு வராமல் கட்சியை உடைக்க பொதுச்செயலாளர் ஜெயலலிதா என்றும் அறிவித்தும் ஆட்சியை கவிழ்க்க 70 கழக சட்டமன்ற உறுப்பினர்கள் கூடி நாவலர் அவர்களை முதல்வராக தேர்ந்தெடுத்ததாக பொய்யாகவும் கழக சட்ட விதிகளுக்கு புறம்பாகவும் அறிவித்தது நாடறிந்த உண்மையாகும்.

அண்ணா வழியில் வந்த நாவலர் மேற் கண்ட உண்மைகளை முற்றிலும் அறிந்தவர். தனக்கு முதலமைச்சர் பதவி கிடைக்கவில்லை என்ற ஒரே காரணத்தால் நடைபெற்ற ஜனநாயக முறைகேடுகளுக்கும் நாவலர் துணை போய் இருக்கின்றார் என்பது தெளிவான உண்மையாகும்.

## துர்பாக்கியம்

அன்னை ஜானகி எம்.ஜி.ஆர் அவர்களை முதலமைச்சராக ஏற்று பணியாற்ற மாட்டேன் என்று கூறிய நாவலர் எதிர்காலத்தில் ஜெயலலிதா தான் முதலமைச்சர் என்று ஒப்புக் கொள்ள வேண்டிய துர்பாக்கிய நிலைக்கு வந்துள்ளார்.

இதே ஜெயலலிதாவை நாவலர் அவர்கள் நாகூசும் வார்த்தைகளால் எவ்வளவு கேவலமாக பேசி உள்ளார்கள் என்பது ஜெயலலிதா அறிந்த உண்மையாகும். ஜெயலலிதா நாவலரை எவ்வளவு கேவலப்படுத்தப்போகிறார் என்பதை எதிர்கால சர்த்திரம் நிரூபிக்கப்போகிறது.

இவ்வாறு இராகவானந்தம் தமது அறிக்கையில் கூறியுள்ளார்.

---

# சில கேள்விகளும்? பதில்களும்!

## தொல்லை நினைவுகள்

கேள்வி:- பிரதமர் ராஜீவ்காந்தி ஜெயாவிற்கு பிறந்த நாள் வாழ்த்து அனுப்பியுள்ளாரே?

பதில்:- எவ்வளவு-பெரிய மனிதர் பார்த்தீர்களா நம் பிரதமர்?

அவருக்கு எவ்வளவோ வேலைகள். தொல்லைகள் இருந்தும், "பாப்பாவின்" பிறந்த நாளை ஞாபகம் வைத்து வாழ்த்துஅனுப்பியிருக்கிறார் பாருங்கள்!

## "பாப்பா" "மூப்பா" கூச்சல்

கேள்வி:- சபாநாயகர் பாண்டியனை ராஜினாமா செய்யச் சொல்லப்போடும் கூச்சலைப் பற்றி?

பதில்:- ஏன்-பிரதமர்ராஜீவ்காந்தியைக்கூடத் தான் ராஜினாமாச் செய்யச் சொல்கிறார்கள்!

நம் சபாநாயகரையாவது இங்கேயுள்ள "பாப்பா"-"மூப்பா" கட்சிகள் தான் ராஜினாமாச் செய்யச்சொல்கின்றன!

ஆனால் பிரதமரை இந்தியாவின் எல்லா எதிர்க்கட்சிகளும் ஒரே குரலில் ராஜினாமாச் செய்யச் சொல்கின்றனவே பலன் உண்டா?

## பணமே இலக்கு

கேள்வி:- "அவர்கள் சொல்வது சொந்தக்கருத்து" என்று அன்னை சொன்னால் அது தன் சொந்தக்கூட்டத்தையே சொந்த ஆதாயத்திற்காக காட்டிக் கொடுக்கும் அற்பத்தனமாகும் "என்கிறாரே பிழைக்கும் பத்திரிகையாளர்...?

பதில்:- அப்படியா?

நாராயணசாமி நாவலர் அவரது கட்சிக்கு அதிக இடம் கேட்பது அவருடைய சொந்தக்கருத்து என்று "பாப்பா" சொன்னது என்ன தனமாம்?

பிறவி அற்பர் இந்தப்பிழைக்கும் பத்திரிகையாளர் பணம் கொடுத்தால் யாரையும் தூற்றுவார்-யாரையும் போற்றுவார்! பணம் ஒன்றே அவனது "இலக்கு'!

## அது தெரியலையா?

கேள்வி:- "காங்கிரசார், எம். ஜி. ஆரின் ஆட்சியை மட்டம் தட்டிப்பேச தொடங்கியுள்ளனர்" என்று குமுறுகிறாரே நாவலர்?

பதில்:- காங்கிரசார் மட்டுமா புரட்சித் தலைவர் ஆட்சியை மட்டம் தட்டிப் பேசுகிறார்கள்?

பிழைக்கும் பத்திரிகையாளரே புரட்சித்தலைவர் ஆட்சியை தாக்குவது உங்களுக்குத் தெரியவில்லையா?

## அந்த என்ன "குறி?"

கேள்வி:- "உன்னை விடமாட்டேன்" அம்புகள் மீது கோபம் கொண்டு மாய தற்குறிகள் அல்ல நாங்கள்" என்று பிழைக்கும் பத்திரிகையாளர் கூறுவது பற்றி..?

பதில்:- "தற்குறி" "கூலி எழுத்தாளன்" என்றெல்லாம் ஒரு மாமாப்பையனை விட்டு இந்த அம்பைப்பற்றி எழுதி சவால் வேறுவிட்டாரே!

அது என்ன "குறி" யாம்?

-கா.

---

ஊருக்கு போகிறவரை வழியனுப்பவோ வரவேற்கவோ ரயில்வேக்கு ரூபாய் 1.50 அழவேண்டும்

# ஏழைஎளியோர் கடிதம் எழுத முடியாது- மணிஆர்டர் அனுப்ப இயலாது:டெலிபோனும் கிட்டாது

ராஜீவ் அரசு அளித்த புதிய "பரிசுகள்"

சென்னை, பிப் 25- ஏழை எளியவர்களை வாட்டிவதைக்கும் வகையில் ரயில்வே கட்டணம் தபால் கட்டணம் தொலைபேசிக் கட்டணம் ஆகியவற்றை மத்திய அரசு உயர்த்தி உள்ளது. மத்திய அரசின் ரெயில்வே பட்ஜெட் தாக்கல் செய்யப்பட்டது தபால் கட்டணம் மற்றும் தொலைபேசிக் கட்டண உயர்வு திட்டமும் தாக்கல் செய்யப் பட்டது.

## வழக்கத்திற்கு விரோதம்

பொதுவாக மத்திய அரசின் வரவு செலவு (பட்ஜெட்)திட்டத்தில் தான் தபால் டெலிபோன் கட்டண உயர்வு பற்றிய அறிவிப்புகள் இடம் பெறும்.

ஆனால் நேற்று பாராளுமன்றத்தில் ரெயில்வே பட்ஜெட்டை தொடர்ந்து தபால் டெலிபோன் கட்டண உயர்வு பற்றிய அறிவிப்பு வெளியிடப்பட்டது.

இரயில் கட்டணம் ஏழை எளிய மக்களை வாட்டி வதைக்கும் வகையில் உயர்த்தப்பட்டுள்ளது.

இரண்டாம் வகுப்பு "எக்ஸ்பிரஸ்" ரெயில் கட்டணம் ரூபாய் 2 முதல் ரூபாய் 15 வரை உயர்த்தப் பட்டுள்ளது. இதனால் சென்னை - நெல்லைக்கு ரூபாய் 12 அதிகரிக்கும்.

பிளாட்பாரம் டிக்கட் 1.50 ஆக உயர்த்தப் பட்டுள்ளது.

நாம் ஒருவரை வரவேற்கவோ வழி அனுப்பவோ ரயில் நிலையத்திற்குள் செல்ல வேண்டுமானால் ரூபாய் 1.50 செலுத்த வேண்டும்.

இது ஏழை மக்கள் மீது சுமத்தப்பட்ட பெரும் சுமையாகும்.

சீசன் டிக்கட்டுகளை பயன்படுத்துபவர்கள் குறிப்பாக தொழிலாளர்கள்' மாணவர்கள்தான் சீசன் டிக்கட் கட்டணத்தையும் மத்திய அரசு உயர்த்தி உள்ளது.

தபால் கவர் கட்டணம் இண்லன்ட் லட்டர் விலையும் உயர்ந்துள்ளது. பொது தொலைபேசி கட்டணமும் ரூபாய் ஒன்றாக உயர்ந்துள்ளது.

ஏழைகள் பயன்படுத்தும் தொலைபேசிக் கட்டணம் உயர்த்தியது ராஜீவ் அரசு ஏழைகளுக்கு தந்த பரிசாகும்

பொதுவாக தபால் கட்டண உயர்வு ரயில்வே கட்டண உயர்வு தொலைபேசிக் கட்டண உயர்வு மக்களிடையே மிகுந்த பாதிப்பை ஏற்படுத்துவதாக உள்ளது

---

பிரதமரை அடங்காப்பிடாரி

# ஆட்டிவைக்கிறார் என்ற எண்ணம் வருவது நல்லதா?

வை.பெருமாள் கண்டனம்

மதுரை, பிப். 25 பிரதமரைசந்தித்த பின் ஜானகி எம்.ஜி.ஆர் ஆட்சி கலைக்கப்படும் என்றுஜெயலலிதா சொல்கிறா. ஆட்சி கலைக்கப்படுகிறது. பிரதமரை ஜெயலலிதா ஆட்டி வைக்கிறார் என்ற எண்ணம் வளர்வது நல்லதல்ல என்று வை பெருமாள் கூறினார்

வட்சோபலட்சம் மக்கள் கலந்து கொண்ட மதுரை பொதுக்கூட்டத்தில் கழக தொழிற்சங்க பிரிவு செயலாளர் வை பெருமாள் பேசியதாவது:-

விலைவாசி உயர்வு இந்த நாட்டு மக்களை வாட்டி வதைத்துக் கொண்டிருக்கிறது வேலையில்லாத் திண்டாட்டம்பெருகிக்கொண்டே இருக்கிறதுஇவற்றை கட்டுப்படுத்தமத்திய அரசு உருப்படியானஎந்த நடவடிக்கையையும் எடுத்ததாக தெரியவில்லை அதற்கு பிரதமருக்கு நேரமும் இல்லை.

மத்திய அரசின் தவறான ஜவுளிக்கொள்கையால்இன்று நாட்டில் பல்லாயிரக்கணக்கான ஆலைகள் மூடிக் கிடக்கின்றன அதனால் லட்சக்கணக்கான தொழிலாளர்கள் பசியும்- பட்டினியுமாக வாடிக் கொண்டிருக்கிறார்கள்.

இதை கவனிக்க பாரதப் பிரதமருக்கு நேரமில்லை.

புதிய ஜவுளிக் கொள்கையின்படி இந்த நாட்டில் உற்பத்தியான பருத்தியை தாராளமாக வெளிநாடுகட்கு ஏற்றுமதி செய்ய அனுமதியளித்ததன் விளைவாக பருத்தி பற்றாக்குறை ஏற்பட்டு நூல் விலை இரண்டு மடங்கு உயர்ந்து விட்டது. இதன் விளைவாக 46 லட்சம் கைத்தறி நெசவாளர்களும்விசைத்தறி நெசவாளர்களும் அரை வயிற்றுக் கஞ்சிக்கும் வழியின்றி வாடிக் கொண்டிருக்கிறார்கள். இப்பிரச்சினை குறித்து விவாதித்து நடவடிக்கை எடுக்க பாரதப் பிரதமருக்கு நேரமில்லை.

மகாராஷ்டிர முதல்வர் எஸ் பி சவான் மகாராஷ்டிா கர்நாடக எல்லை பிரச்சினை குறித்து விவாதிக்க 5 மாதத்தில் 7 முறை டெல்லி சென்று பல நாட்கள் தங்கியிருந்தும் பாரதப் பிரதமரை சந்திக்க அவருக்கு வாய்ப்புக்கிடைக்கவில்லை.

ஆனல் தமிழ்நாட்டிலிருக்கும் பால்கனிப் பாவை டெல்லி சென்று பிரதமரை 1 மணி நேரம் தனிமையில் சந்திக்கிறார். அந்தச் சந்திப்பின் விளைவு தமிழகத்தில் புரட்சித்தலைவர் அமைத்த அரசு கலைக்கப்படுகிறது

ஆட்சிகலைக்கப்படுவதற்கு முன்னதாகவே நாளை ஆட்சி கலைக்கப்படும் என்று பால்கனிப்பாவே அறிவிக்கிறாா. அதன்படி ஆட்சி கலைக்கப்படுகிறது. ஆளுநா மாற்றப்படுவாா என்று அவர் சொல்லுகிறார் அதன் பிறகு ஆளுநர் மாற்றப்படுகிறாா ஒரு மணி நேர சந்திப்பிற்கு இவ்வளவு சக்தியா? இந்தப் பின்னணியை எல்லாம்பார்க்கும்போது மத்திய அரசை ஜெயலலிதா ஆட்டிப் படைக்கிறாா என்ற எண்ணம் வளரும் இது நாட்டுக்குநல்லதா?

விலைவாசி உயர்வு வேலையில்லா திண்டாட்டம்மூடிய ஆலைகள் பிரச்சினை கைத்தறி விசைத்தறி நெசவாளா போராட்டம் போன்ற எண்ணற்ற பிரச்சினைகளைத் தீர்க்க முயற்சியெடுக்காமல் அன்னை ஜானகி எம் ஜி ஆர் அரசைக் கலைத்த ராஜீவ் காந்திக்கு மக்கள் சரியான பாடம் புகட்டுவார்கள்

இவ்வாறு வை பெருமாள் பேசினார்.

---

# ஆளே இல்லையா...? 'கடாமீசை' ஆவேசம்!

ஓடுகாலி, அடங்காப்பிடாரி கும்பலின் கூட்டம் திருவல்லிக்கேணி தொகுதி லாயிட்ஸ் சாலையில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. பத்து வட்டச் செயலாளர்களில் ஒன்பது பேரை "குளிப்பாட்டி" கொண்டுபோய் விட்டோம் என்று அடங்காப்பிடாரி [illegible] மார்தட்டும் இடம் இது.

இந்தக் கூட்டத்தில் முன்னாள் மந்திரி சாத்தூர் 'கடாமீசை" பேசுவதாக ஏற்பாடு. நேரம் கடந்து கொண்டேயிருந்தது. கூட்டம் சேரவில்லை.

இதனால் எரிச்சல் அடைந்த 'கடாமீசை' கூட்டத்திற்கு வரவில்லை.

ஓடுகாலி கும்பலில் மேல்தட்டில் இருந்த குத்துவெட்டு கீழேயும் சூடு பிடித்திருக்கிறது

நடக்கட்டும்! இதயதெய்வம் புரட்சித்தலைவருக்கும், அன்னையாருக்கும் துரோகம் செய்த கும்பலுக்கு - நிம்மதி ஏது? அமைதி ஏது?

நொறுங்கட்டும் துரோகம்!

அழியட்டும் அடாங்காப்பிடாரியின் ஆணவம்!

-கா

---

## தலைமைக் கழக அறிவிப்பு

கழக - ஆய்வுக் குழு
இணைப்பு பட்டியல்

சென்னை மாவட்டம்
திரு. இரா. மோகனரங்கம் அவர்கள்
திரு. பா. அங்கமுத்து அவர்கள்
திரு. சைதை துரைசாமி அவர்கள்

செங்கற்பட்டு மாவட்டம்
திரு கே பாலாஜி அவர்கள்
திரு. வேலூர் நாராயணன் அவர்கள்
திரு. எஸ். பட்டாபிராமன் அவர்கள்
திரு. கே. எத்திராஜன் அவர்கள்
திரு. இரா. சண்முகம்அவர்கள்

வடாற்காடு மாவட்டம்
திரு. த. பழனி அவர்கள்
திரு. ஏ. வ. வேலு அவர்கள்
திரு. இரா. ச. மாறன் அவர்கள்
திரு. டி.அன்பழகன் அவர்கள்

தென்னாற்காடு மாவட்டம்
திரு. முத்து கோவிந்தராசன் அவர்கள்
திரு. கே. முருகுமணி அவர்கள்
திரு. தண்டபாணி அவர்கள்
திரு. முகமதுஅனிபா அவர்கள்
திரு கோ. மூர்த்திராமன் பி. ஏ., பி. எல். அவர்கள்
திரு. பூமாலைசண்முகம் பி. ஏ., பி. எல். அவர்கள்
திரு. சீனு. ஜெயராமன் பி. ஏ., பி. எல். அவர்கள்

சேலம் மாவட்டம்
திரு. செ. செம்மலை அவர்கள்
திரு. கே. பி. ராமலிங்கம் அவர்கள்

கோவை மாவட்டம்
திரு. க. மருதாசலம் அவர்கள்
திரு. கா. கருப்பசாமி அவர்கள்
திரு. பேரூர் க. சண்முகசுந்தரம் அவர்கள்

பெரியார் மாவட்டம்
திரு. த. வள்ளல் அவர்கள்
திரு. ஆர். ரங்கசாமி அவர்கள்
திரு. அப்பன் மு. பழனிச்சாமி அவர்கள்

நீலகிரி மாவட்டம்
திரு. உச்சிகவுடர் அவர்கள்

கிழக்கு தஞ்சை மாவட்டம்
திரு. டி. வீராசாமி அவர்கள்
திரு. கோ. வி.நாராயணசாமி அவர்கள்

மேற்கு தஞ்சை மாவட்டம்
திரு. டி. வீராசாமி அவர்கள்
திரு.பி.என். ராமச்சந்திரன் அவர்கள்
திரு. வி. ஆர். கே. பழனியப்பன் அவர்கள்

மதுரை மாவட்டம்
திரு. ஏ. பாலுச்சாமி அவர்கள்
திரு. சி. தங்கம் அவர்கள்

இராமநாதபுரம் மாவட்டம்
திரு. கவிஞர் முத்துராமலிங்கம் அவர்கள்

புதுக்கோட்டை மாவட்டம்
திரு. வி. ஓ. எஸ். பன்னீர்செல்வம் அவர்கள்
திரு. வெங்கடாசலம் அவர்கள்
திரு. ஜாபர்அலி அவர்கள்
திரு. அச்சகம் ராஜகோபால் அவர்கள்
திரு. காசிமுததுமாணிக்கம் அவர்கள்
திரு. வி. சி. கணேசன் அவர்கள்

காமராஜர் மாவட்டம்
திரு. பொ. அன்பழகன் அவர்கள்

வ. உ. சிதம்பரனார் மாவட்டம
திரு. இரா. கிருஷ்ணன் அவர்கள்

நெல்லை மாவட்டம்
திரு. எம். பி. அழகியநம்பி அவர்கள்

குமரி மாவட்டம
திரு. இராகவன் அவர்கள்
திரு: எம். ஜே. பஷீ அவாகள்

கழகத் தலைவர்
**அன்னை ஜானகி எம்.ஜி.ஆர்.**
அவர்களின் அனுமதியுடன் இவ்[illegible] வெளியிடப்படுகிறது.

எஸ். இராகவானந்தம்
[பொதுச் செயலாளர் பொறுப்பு]
மூத்த துணைப் பொதுச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா திமு கழகம்

சென்னை-14
25-2-88

★ பேரறிஞர் அண்ணாவின் அரசு அமைய 1967-ல் புரட்சித்தலைவர் இரத்தம் சிந்தினார்

இதயதெய்வத்தின் ஒரே வாரிசாம்

அன்னை ஜானகி எம். ஜி. ஆர். ஆட்சி அமைய

# ரத்தம் மட்டுமல்ல என் உயிரையும் எடுத்துக்கொள்க

துரோகிகள் - எதிரிகள் அணியினர் கொலைவெறி முயற்சிகளுக்கு நடுவே ஆர்.எம்.வீ. நிகழ்த்திய வீரஉரை

புதுக்கோட்டை பிப் 25

அறிஞர் அண்ணா அவர்களின் ஆட்சி அமைய 1967-ல் புரட்சித்தலைவர் ரத்தம் சிந்தினார்.

அன்னை ஜானகி எம். ஜி. ஆரின் ஆட்சி மீண்டும் அமைய ரத்தம்மட்டுமல்ல என் உயிரையும் சேர்த்து எடுத்துக் கொள்ளுங்கள் என்று துரோகக் கும்பலின் ஆயுதக் கலவரத்திற்கிடையே ஆர். எம் வீ வீர முழக்கமிட்டார்.

அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழக கூட்டங்களுக்கு பல்லாயிரக் கணக்கான மக்கள் திரண்டு வருவதைக் கண்டும் அன்னை ஜானகி எம்ஜிஆரை மீண்டும் ஆட்சிப் பொறுப்பில் அமர்த்த தமிழக மக்கள் உறுதி பூண்டிருப்பதை அறிந்தும் துரோகிகள் முகாம் மட்டுமல்ல எதிரிகள் முகாமும் கலக்கம் கண்டுள்ளது

இதனால் ஆத்திரமுற்று கழகக் கூட்டங்களில் கலாட்டா செய்வது மட்டுமல்ல, முன்னணித் தலைவர்களை தீர்த்துக் கட்டுவதிலும் கவனத்தைச் செலுத்த ஆரம்பித்து விட்டார்கள்.

புதுக்கோட்டையில் ஆர். எம். வீ. பங்கேற்ற பிரமாண்டமான பொதுக்கூட்டம் டி. ஜெயராஜ் தலைமையில் நடந்தது முன்னாள் எம். பி. இளஞ்செழியன் வெங்கடாசலம் எம்.பி. ஆகியோர் முன்னிலை வகித்தார்கள் புதுக்கோட்டை வரலாற்றிலேயே இல்லாத அளவிற்கு மாநாடு போல் இக்கூட்டம் நடந்தது.

ஆர்.எம்.வீ. மேடைக்கு வந்தபோது புரட்சித்தலைவர் புகழ் வாழ்க, அன்னை ஜானகி எம் ஜி ஆர் வாழ்க என்று கழகத்தோழர்கள் விண்ணதிர முழக்கமிட்டனர்

ஆர். எம். வீ. பேசிக் கொண்டிருந்த போது துரோகிகளின் அடியாட்கள் கூட்டத்திற்கு கார்களில் வந்து கலாட்டா செய்ய ஆரம்பித்தனர். பயங்கர ஆயுதங்களையும் அந்தக் கொலைக் காரர்கள் கொண்டு வந்திருந்தனர். வெட்டரிவாள், வீச்சரிவாள், குத்துவாள், மூங்கில், தடிகள் சவுக்குக்கட்டைகள், சைக்கிள் செயின்கள் மற்றும் பல பயங்கர ஆயுதங்களை காரில் வைத்திருந்தார்கள்.

அவர்கள் வந்த காரான டி.என்.பி. 1123 என்ற அம்பாசடர் கார் பயங்கர ஆயுதங்களுடன் கைப்பற்றப்பட்டு, கொலைக்கார கும்பலைச்சேர்ந்த 12 பேர் கைது செய்யப்பட்டனர்.

ஆர்.எம்.வீ. பேசிய போது கூறியதாவது:-

1972ம் ஆண்டு புரட்சித் தலைவர் இந்திய துணைக் கண்டத்தின் புதிய அத்தியாயத்தை எழுதத் தொடங்கினார். 1977ல் பல சோதனைகளை வென்று திமுகவை வீழ்த்தி ஆட்சியில் அமர்ந்தார்.

பாராளுமன்ற சட்டமன்றத் தேர்தல்களை கருத்தில் கொண்டு இ. காங்கிரஸ் புரட்சித்தலைவரோடு நேச உறவு கொண்டது. இன்று அவர்களே நம் முதுகில் குத்திவிட்டனர் அவர்களை பற்றி உங்களுக்குச் சொல்ல வேண்டியது அவசியம் ஆகும் நேற்று முன்தினம் சிதம்பரத்தில் பேசினேன். நள்ளிரவு 12.15க்கு பேச்சை ஆரம்பித்தேன் 15 நிமிடம் மட்டுமே பேசியிருப்பேன். அப்போது சுமார் 15 காங்கிரஸ்காரர்கள் ராஜீவ் வாழ்க என்று கோஷமிட்டவாறு கூட்டத்தில் புகுந்து கலாட்டா செய்தார்கள். கடந்த மாதம் வரை ராஜீவ் வாழ்க' என்று வரவேற்க கழக கண்மணிகள் 25 ஆயிரம் பேர் அங்குதிரண்டிருந்தனர். அந்த கூட்டத்தில் 15 காங்கிரசார் மட்டும் ராஜீவ் வாழ்க என கோஷமிட்டது கேவலமாக இருந்தது. இதைத்தொடர்ந்து இதுநாள் வரை கட்டுண்ட நாகம் போல் இருந்து வந்த கழக கண்மணிகள் சீறிப்பாய்ந்தனர்.

## வெற்றிபெற முடியாது

அடிப்பட்ட சிங்கம் போல சிலிர்த்துஎழுந்தனர். கூட்டத்தில் கலாட்டா செய்த அந்த காலிகளை காவல் துறையினர்பார்த்துக்கொண்டனர் தற்போது காங்கிரசார் வெற்றி பெறமுடியாது என்று முடிவு செய்து விட்டனர். இல்லாவிட்டால் 100 ஆண்டு விழா கொண்டாடிய பாரம்பரியம் மிக்க காங்கிரசார் தமிழகத்தில்கிளியோபாட்ரா பின்னால் அவரது சேலையை பிடித்துக் கொண்டுபோவார்களா? அவரது மாயவலையில் விழுவார்களா? இதுதான் காலத்தின் கோலம்.

உயரத்தில் இருப்பவர்கள் தான் மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். இன்னும் 3 அல்லது 6 மாதத்தில் தேர்தல்நடந்துஅன்னை ஜானகி தாயின் அரசு அமைந்தே தீரும் எங்களது முதல் சட்டம் அன்றே நிறைவேறும் அன்றைய சட்டத்தின் கீழ் எளிய மக்களிடம் சுரண்டப்பட்ட பணம் பறிக்கப்பட்டு மக்களுக்கு செலவு செய்யப்படும்.

கோர்ட்டில் ஜாமீன் கையெழுத்து வக்கீலாக இருந்தவரின் பணம் பறிமுதல் செய்யப்படும். ஜாமீன் இல்லாததால் வாடகை சைக்கிள் கொடுக்க மறுத்தவர் இன்று எவ்வாறு பல கோடிகளுக்கு அதிபதி ஆனார் கோர்ட்டில் ரூபாய் 50க்கு காத்து கிடந்தவரின் இன்றையநிலை எவ்வாறு உள்ளது? இதையெல்லாம் சீர் செய்யும் சட்டம் கொண்டுவருவோம்.

## எதிர் புறத்தில் துரோகிகள்

இவ்வாறு ஆர்.எம்.வீ. பேசிக் கொண்டிருக்கும் போதுகூட்டத்தில் கலாட்டா ஏற்படத் தொடங்கியது மேடைக்குநேர்எதிர்புறத்தில் துரோகிகள் கத்தினார்கள் அதனைத்தொடர்ந்து சத்தியமூர்த்தி தங்கும் விடுதி காம்பவுண்டில் இருந்து சரமாரியாக கற்கள் மேடையையும் கூட்டத்தினரையும் நோக்கி எறியப்பட்டன. போலீசார் கல்வீசியவர்களைப் பிடிக்க அங்கும் இங்குமாக ஓடினார்கள்.

ஆர்.எம்.வீ தொடர்ந்து பேசுகையில் கூறியதாவது:-

அருமைத் தோழர்களே எவ்வளவு நேரம் ஆனாலும் பேசிவிட்டுத்தான் போவேன் நான் யாருக்கும் அஞ்சப் போவது கிடையாது. காலிகளை காவல் துறையினர் கவனித்துக் கொள்வார்கள் நமது தோழர்கள் அமைதியுடன் இருக்கவேண்டும். எந்த சவாலையும் சந்திக்க தயாராக உள்ளேன்.

முதலில் நாம் புரட்சித் தலைவரின் ஆட்சியை அமைப்போம். அன்னை ஜானகி எம் ஜி ஆர் தான் முதல்வராக வருவார் சட்டத்தின் கீழ் துரோகிகளை தெருவிற்கு கொண்டு வருவோம். சட்டத்தின் பிடியில் இருந்து எவரும் தப்ப முடியாது. கடந்த 7 நாட்களாக எனது உயிருக்கு விலை பேசினர்.

இங்கே கலவரம் செய்தவர்கள் என்னை கொல்ல திட்டமிட்டனர்.

காங்கிரசாரும் சேர்ந்து கொண்டு என்னை அழிக்க எண்ணுகிறார்கள். அதாவது நான் ஒருவன் உயிரோடு இருப்பதால்தானே தமிழ்நாட்டில் ஜானகி எம்ஜிஆர் ஆட்சி அமைக்க வழி வகுக்கின்றேன். இவனை அழித்து விட்டால் நமக்கு எதிரியே கிடையாதுஎன்றுஎண்ணுகின்றார்கள். எனக்கும் 61 வயது ஆகிவிட்டது. அண்ணா அரசு அமைய 67-ல் புரட்சித் தலைவர் ரத்தம் வடித்தார் இன்று ஜானகி எம் ஜி ஆர் அரசு அமைய வேண்டுமானால்இந்த வீரப்பன் உயிரையும் கொடுக்கத் தயார் பேடிகளே முடிந்தால் எடுத்துக் கொள்ளுங்கள் ஜானகி எம் ஜி ஆர் ஆட்சியைஅமைக்காமல்நான் சாகமாட்டேன். நான் பேடியல்ல நான் எதற்கும்பயப்படப்போவதுகிடையாது இப்படிநடக்கும் என்று தெரிந்தேநான்வந்துள்ளேன்.

## உடன் கட்டை

திமிர் பிடித்த அடங்காப் பிடாரி பற்றி நான் பேசக் கூடாது என்று இருந்து வந்தேன். இனியும் பேசாமல் இருக்க மாட்டேன். ஜானகி எம் ஜி ஆரைப்பற்றி பேசிய அவரை நான் சும்மா விட மாட்டேன். புரட்சித்தலைவரின் உத்தமபத்தினியை பற்றி யார் பேசினாலும் அவரை என் தாய் தடுத்தாலும் சும்மா விடமாட்டேன்.

புரட்சித்தலைவர் இறந்த போது உடன் கட்டை ஏற நினைத்தேன் என்று நீலிக் கண்ணீர் வடித்திருக்கும் அம்மையாரை பார்த்து கேட்கின்றேன்.

உடன் கட்டைஏறநினைத்தால் எத்தனை பேருக்காக எத்தனை முறை ஏறவேண்டியது வரும் என்பதை மக்களிடம் கூறும்படி கேட்டுக் கொள்கிறேன் இந்த அம்மையார் பேசும் போது எத்தனையோ தடவை நாட்டை விட்டே போக நினைத்ததாகவும். கூறி உள்ளார் கிராமங்களிலே உங்களுக்கு நன்கு தெரியும். வீட்டை விட்டு போனாலே விஷயம் வேறு என்பார்கள். நீங்கள் நாட்டையே விட்டுப் போக நினைத்த மர்மம் என்ன? இந்த விஷயம் மிகவும்கேவலமாக உங்களுக்குத் தோன்றவில்லையா?

ஆட்டை வெட்டுகிறவர் மாலை போடுவது போல காங்கிரசார் நம் கழுத்தை அறுத்து விட்டனர். தமிழ்நாட்டை ஆள அவர்கள் கனவுகண்டனர். அந்தக் கனவை நொறுக்கியவர் சிங்கத்தமிழன் நடிகர் திலகம் நமது சிவாஜிகணேசன் வினைவிதைத்தவன் வினையை அறுக்கத்தானே வேண்டும் ஆகவேதான் அவர்களது (காங்கிரசார்) ஆசையை காங்கிரஸ்காரர்களே நொறுக்கிவிட்டனர்.

இன்னும் 100 ஆண்டுகள் ஆனாலும் காங்கிரஸ் ஆட்சிக்குவராது.

இவ்வாறு ஆர். எம். வீ. பேசினார்.

கூட்டத்தில் அ. வெங்கடாசலம், பன்னீர்செல்வம் ராஜகோபால் ஜாபர்அலி சின்னதம்பி, வைரமுத்து காசி முத்துமாணிக்கம் ஒன்றிய செயலாளர்கள் திருவரங்குளம் செல்லையா திருமயம் வீர சுப்பையா கந்தர்வகோட்டை சாமியய்யா விராலிமலை எம் ஏ சின்னராசு புதுக்கோட்டை ஒன்றிய செயலாளர் ரெங்கசாமி, குன்றாண்டார் கோவில் ஒன்றியசெயலாளர் எ. சைவராசு, பேரூராட்சி மன்ற தலைவர்கள் பொன்னமராவதி வலம்புரி முத்து, கீரனூர் கிருஷ்ணமூர்த்தி ஆலங்குடி கே எல் கே ஏ முகமது யூசுப் பொன்னமராவதி நகர செயலார் து முத்தையா, தலைமைக் கழக பேச்சாளர்கள் கோட்டையடி கதிர்வேலு ஜோசப் காசிநாதன், ராமமூர்த்தி, மகாலிங்கம் செல்வமணி, பன்னீர் செல்வம், எம். ராஜாமுகமது ஏ. ராஜா முகமது கே. ராசப்பன் உள்பட 14 நகராட்சிமன்றஉறுப்பினர்கள் மற்றும் நூற்றுக் கணக்கான ஊராட்சிமன்றத் தலைவர்கள் ஆகியோர் கலந்து கொண்டு பேசினார்கள்.

கழகத்தின் மூத்த தலைவராம் ஆர். எம் வீ.யின் கதையை முடித்துவிட்டால்... கழகத்தையே அழித்துவிடலாம் என்ற நினைப்போடு கொலைகாரக் கூட்டம்... திருநாவுக்கரசின் ஆதரவோடு அனுப்பியிருக்கிற பயங்கர ஆயுதங்களைப் பாரீர்? நியாயம் கேட்கிறோம்!

★ இந்தியர்களை தலைகுனியசெய்துவிட்டது காங்கிரஸ்

★ மாநிலங்களவையில் வரலாறு காணா அடாவடி செயல்

# காங்கிரஸ் கலாட்டா: தலைவர்கள் கண்டனம்

சென்னை, பிப். 25. மாநிலங்களவையில் மத்திய அமைச்சர் ப.சிதம்பரமும், காங்கிரசாரும் வரலாறு காணாத வகையில் கலாட்டா செய்ததற்கு நாடெங்கும் கடும் கண்டனம் தெரிவிக்கப்பட்டுள்ளது.

மாநிலங்களவையில் தெலுங்கு தேசக் கட்சித் தலைவர்உபேந்திரா, அவைத் தலைவர் டாக்டர் சங்கர் தயாள்சர்மா அனுமதியுடன் பேசினார்.

ஆனால் அவரை பேச விடாமல் மத்திய மந்திரி சிதம்பரமும் மற்ற காங்கிரசாரும் பயங்கரமாக கலாட்டா செய்தனர்.

இதை டாக்டர் சர்மா கண்டித்தார்.

ஆனால் மத்திய அமைச்சர் சிதம்பரம் டாக்டர் சர்மாவுக்கு ஆலோசனைகொடுத்து பேசினார், இதனால் சர்மா வேதனை அடைந்தார். காங்கிரசார் கலாட்டாவை நிறுத்தவில்லை.

அப்போது பிரதமர்ராஜீவ் காந்தியும் சபையில் இருந்தார்.

காங்கிஸ்ரசாரின் போக்கு கண்டு வேதனை அடைந்த அவைத்தலைவர் சர்மா, "நான் பதவிவிலக தயாராக இருக்கிறேன்" என்று குறிப்பிட்டார். மூத்த உறுப்பினர்கள் சென்று டாக்டர் சர்மா வைச்சமாதானப்படுத்தினர்.

காங்கிரஸ் உறுப்பினர்கள் கலாட்டா செய்ததை மற்றஉறுப்பினர்கள் கண்டித்தனர்

நாடாளுமன்ற எதிர்க்கட்சித் தலைவர்கள் 11பேர் காங்கிரஸ் செயலைக் கண்டித்து அறிக்கை வெளியிட்டனர்

கழக அணித் தலைவர் ஆலடி அருணாவும் எதிர்க்கட்சித் தலைவர்கள் விடுத்த கண்டன அறிக்கையில்கையெழுத்திட்டுள்ளார்

## சிவாஜி கண்டனம்

தமிழக முன்னேற்ற முன்னணித்தலைவர் நடிகர்திலகம் சிவாஜி கணேசனும், அவரது கட்சியினரும், மாநிலங்களவையில் காங்கிரஸ் நடந்து கொண்ட விதத்தை கடுமையாகக் கண்டித்தனர்.

காங்கிரஸ் நடத்திய அடாவடி நாட்டு மக்களுக்கே தலைகுனிவை ஏற்படுத்திவிட்டது என்று சிவாஜி கூறினார்.

## எம், பி. எஸ். கண்டனம்

எம். பி. சுப்பிரமணியம் விடுத்துள்ள அறிக்கை வருமாறு:-

மாநிலங்களவையில் பிப்ரவரி 23ம் தேதியன்று ஆளும் கட்சி அங்கத்தினர்களும், அதன் தலைவர் பிரதமர் திரு. ராஜீவ்காந்தி அவர்களும் நடந்து கொண்ட செயல் 'மிகவும் கேவலமானதாகும்'.

ஒரு மணிநேரம் கூச்சலும் குழப்பமும் நிலவியிருக்கிறது. ஆளும்கட்சி உறுப்பினர்களை கட்டுப்படுத்தமுடியவில்லை. கூச்சல் போடுவதிலும் எதிர்க்கூச்சல் போடுவதிலும் நான்கு அமைச்சர்கள் பங்கெடுத்துள்ளனர்சபைதலைவருக்கு மரியாதை சிறிதும் காட்டப்படவில்லை.

இவைகளை யோசித்தால், ஆளும் கட்சிக்கு பெரிதும் சங்கடத்தை உண்டுபண்ணக்கூடிய ஏதோ ஒரு பிரச்சினை விவாதத்திலிருக்கிறது என்பது தெளிவாகிறது. என்ன அந்தப் பிரச்சினை? ஆந்திர மாநில ஆளுநர் தனது வரம்புக்கு மீறி செலவு செய்வதை குறித்துதெலுங்கு தேச கட்சியின் தலைவர் பி உபேந்திரா அவர்கள் மன்றத்தில் பிரச்சினையை எழுப்புவதற்கு, மாநிலங்களவைத் தலைவர் டாக்டர் சர்மா அனுமதி அளித்து விட்டார். பிரதமர் ராஜீவ்காந்தி அவையிலேயே இருந்தார் தனது உறுப்பினர்களும் அமைச்சர்களும் பாராளுமன்ற மரபுக்கு விரோதமாகவும், பச்சையாக ஜனநாயக விரோத முறையிலும் நடப்பதற்கு அவர் ஊக்கமளித்துள்ளார் என்பதும் தெரிய வருகிறது.

ஜனநாயகமரபுகளை மதிக்கவும் அதைக் காப்பாற்றவும் பிரதமர் தவறிவிட்டார் - என்பதையே இது எடுத்துக்காட்டுகிறது.

இந்தியக் குடியரசின் துணைத்தலைவரும்; மாநிலங்களவை தலைவருமான சங்கர்தயாள்சர்மாவை பிரதமரும், அவரது கட்சியினரும் நடத்திய விதம். பாராளுமன்ற ஜனநாயகத்தில் நம்பிக்கை வைத்துள்ள நம்மை தலைகுனிய வைத்துவிட்டது.

இவ்வாறு எம்.பி.சுப்பிரமணியம் கூறியுள்ளார்.

## சி. எஸ். கண்டனம்

முன்னாள் மத்திய அமைசர் சி. சுப்பிரமணியமும் கலாட்டா செய்த காங்கிரசாரை கண்டித்துள்ளார்.

நடந்த சம்பவங்களுக்கு பிரதமர் மன்னிப்புக் கேட்க வேண்டும் என்றும் சி. எஸ். வலியுறுத்தியுள்ளார்.

## திருப்பதி லட்டு விலை உயர்வு

திருப்பதி, பிப். 25-

திருப்பதிகோவிலில் விற்கப்படும் லட்டின் விலை தற்போது 3 ரூபாய் ஆகஉள்ளது அதுவரும் மார்ச் 1 ந்தேதியிலிருந்து ரூபாய்4 ஆகஉயர்த்தப்பட்டுள்ளது

லட்டு தயாரிப்பதற்கான மூலப்பொருளான நெய்யின் விலை உயர்த்தப்பட்டதால் லட்டின் விலை உயர்த்தப்பட்டதாக திருப்பதி தேவஸ்தானம் அறிவித்துள்ளது

## மாநகராட்சி அலுவலகத்தில் ஆளுநர்

சென்னை' பிப். 25.

சென்னை மாநகராட்சி அலுவலகத்திற்கு ஆளுநர் அலெக்சாண்டர் வருகை தந்தார்.

மாநகராட்சி தனி அதிகாரி சந்திரகூடன் மற்றும் ஆணையாளர் சாந்தஷீலாநாயர் ஆகியோர் ஆளுநரை வரவேற்றனர்

மாநகராட்சி அலுவலர்களிடம் ஒருமணி நேரம் சென்னைநகரின் சுகாதாரம் மற்றும் தூய்மை பற்றி கவர்னர் கலந்தாலோசித்தார்.

## ஐயோ... ஆபாசமா!

ஆபாசத் தடைச் சட்டப்படி நமது சார்பு ஏடுகள் மீது காவல்துறைக்கு அரசு பரிந்துரை செய்திருப்பதாகவும், இந்தச் செய்திகளை மொழிபெயர்த்து டெல்லிக்கு அனுப்பியிருப்பதாகவும் எழுதி 'கள்ளப்பண' உல்லாசமைனர் 'நடத்தும் ஏடு' 'பெட்டை மிரட்டல்' ஒன்றை விடுத்திருக்கிறது.

டெல்லிக்கு மொழி பெயர்த்து எழுதும் மாமா வேலையை தரகன் வேலையை, காட்டிக்கொடுக்கும் வேலையை இதுவரை பிழைக்கும் பத்திரிகையாளர் மட்டுமே செய்து வந்தார் இப்போது நீங்களுமா? சபாஷ்!

எழுதியது உங்களைப்பற்றி... எழுதிய முறை ஆபாசமல்ல எழுதப்பட்டவர்களின் யோக்கியதை அப்படியிருந்தால்... நாங்கள் என்ன செய்ய?

-கா

## நாட் குறிப்பு

### சைதை 145வது வட்டம்

ஆட்சிக்கலைப்பை கண்டித்து பொதுக்கூட்டம்

நாள் 27-2-88 மாலை 6மணி

இடம்: சைதை மேற்கு ஜோன்ஸ்சாலை

தலைமை டி.ஏ.சந்திரன்

முன்னிலை: சொ.கடும்பாடி மே. சே. மகாலிங்கம்

சிறப்புரை வலம்புரிஜான் எம்.பி

பெ.செல்வேந்திரன் எம்.பி

சைதை சா.துரைசாமி

இரவு மணிசாமிகலைநிகழ்ச்சி

### துறைமுகம் பகுதியில் மாபெரும் கழககூட்டம்

சென்னை. பிப். 25-

துறைமுகம் பகுதி 46 வது வட்டம் சார்பில் அன்னை ஜானகி எம் ஜி ஆர் அரசை கலைத்ததை கண்டித்து மாபெரும் கழக பொதுக் கூட்டம் இன்று(25-ந் தேதி) மாலை கொண்டியம் பகுதி ரங்கபிள்ளை தெருவில் சாமிநாதன் தலைமையில் நடைபெறுகிறது.

இக் கூட்டத்தில் ஜேப்பியார். கு.க.செல்வம் என்.வி என்.செல்வம். குண்டு கல்யாணம். கணேசன். தாங்கை கண்ணன். மண்ணடி கிருஷ்ணமூர்த்தி. மணி, துரை எல்லப்பன், நடராசன். கஜேந்திரபாபு, ராஜேந்திரன் மற்றும் ஏராளமானோர் கலந்து கொண்டு பேசுகின்றனர். எம். வீ. ராமன் இந்த கூட்ட ஏற்பாட்டை செய்துள்ளார் மாலை எம் எம் சாமி குடந்தை புஷ்பா கலைக்குழுவின் கலை நிகழ்ச்சி நடைபெறும்.

ஒருவரை அழிக்கவா இத்தனை ஆயுதம்? ஊரையே அழித்துவிடலாமே? செய்யுங்கள் செய்யுங்கள். மக்கள் கையில் ஒரேஒரு ஆயுதம் - மகத்தான ஆயுதம் அதுதான் வாக்குச்சீட்டு- இருக்கிறது. அதைமட்டுமே நம்பும் நாங்கள் இந்த மிரட்டலுக்கு அஞ்சமாட்டோம்.

மாநிலங்களவையில் கலாட்டா செய்த

# மத்யமந்திரி சிதம்பரம் பி. எச். பாண்டியனை பதவிவிலக சொல்வதா

## முன்னாள்காங்கிரஸ் எம்.எல்.ஏ. வெங்கடரமணன் கண்டனம்

விழுப்புரம். பிப், 25. மாநிலங்களவையில் கலாட்டா செய்து அவைத் தலைவரின் கண்டனத்துக்கு ஆளான மத்திய அமைச்சர் ப சிதம்பரம் தமிழ்நாடு சட்ட சபை சபாநாயகர் பி. எச். பாண்டியனை பதவிவிலகச் சொல்வது வேடிக்கையானது என்று முன்னாள் எம். எல் ஏ. வெங்கடரமணன் கூறினார்.

விழுப்புரத்தில் பிரமாண்டமான முறையில் தமிழக முன்னேற்ற முன்னணி கட்சி பொதுக்கூட்டம் நடந்தது. அக்கட்சியின் தலைவர் நடிகர்திலகம் சிவாஜி கணேசன் கலந்து கொண்டார்.

அன்னை ஜானகி எம்.ஜி. ஆர் அரசுக்கு எதிராக வாக்களிக்கமாட்டோம் என்று கூறி எம் எல் ஏ பதவியை ராஜினாமா செய்தவர்களில் ஒருவரான வெங்கடரமணன் பகையில் கூறியதாவது: தேர்மத்துக்கு மாறாக அநியாயமாக ஜானகி எம்.ஜி. ஆர் அரசுக்கு எதிராக ஓட்டு போட காங்கிரஸ் மேலிடம் கூறியது.

நாங்கள் மறுத்து எம் எல் ஏ பதவியை ராஜினாமா செய்தோம்.

### சட்டத்துக்கு விரோதிகள்

சட்டத்துக்கு புறம்பானவர்கள் காங்கிரசார சட்டம் நியாயம் எதையும் அவர்கள் கடை பிடிக்கமாட்டார்கள்.

சட்டசபை பார்வையாளர் மாடத்திலிருந்து நாற்காலியைத் தூக்கி வீசுகிறவர்களை கொண்ட காங்கிரஸ் இயக்கத்திடம் எப்படி நியாயத்தை எதிா பார்க்க முடியும்?

சட்டசபையில் காங்கிரஸ் கட்சிதான் வன்முறையை நடத்தியது. சட்டசபையில் வன்முறை நடத்தி புதிய சபாநாயகரைதோ ந்தெடுத்ததாக அறிவிப்பதுதான் ஜனநாயகமா?

மாநிலங்களவையில் காங்கிரசார் ரகளை செய்து இந்தியாவுக்கே தலைகுனிவு ஏற்படுத்தினர்மத்திய மந்திரி ப. சிதம்பரத்தை அவைத் தலைவா சர்மா கண்டித்துள்ளார்.

### சிதம்பரம் விலகவேண்டும்

அப்படிப்பட்ட சிதம்பரம் தமிழ்நாடு சட்டசபை சபாநாயகர் பி. எச். பாண்டியனை ராஜினாமா செய்ய சொல்லலாமா?

ப. சிதம்பரம் அமைச்சராக இலலாவிட்டால்அவரை சபையிலிருந்து வெளியேற்றி இருப்பேன் என்று மாநிலங்களவைத்தலைவர் சர்மா கூறியுள்ளார்.

இப்படி ரகளை செய்த சிதம்பரம் தான் பதவி விலக வேண்டும் மாநிலங்களவையில் ரகளை செய்து தமிழகத்திற்கு தலைகுனிவு ஏற்படுத்தியவர் சிதம்பரம் பி. எச், பாண்டியனை ராஜினாமா செய்யுமாறு சொல்ல அவருக்கு எந்த தகுதியும் இல்லை.

இவ்வாறு வெங்கடரமணன் கூறினார்.

### பேசியோர் விவரம்

கூட்டத்தல் தளபதி சண்முகம் புரசைகுமரன்,கடலோசைகா தர்,கும்பகோணம் நகர சபைத் தலைவா குமாரசாமி முன்னாள் எம்.எல்.ஏ. ஈ.வி.கே,எஸ்.இளங்காவன் பால்பாண்டியன் ஆகியோர் பேசினர்.



## ஏல விற்பனை

1. பி மாங்கிலால் மேத்தா 3 தையப்ப முதலி லைன் சென்னை-1 (15-2-86 முதல் 20-12-86 முடிய) ஏலத்தேதி 4-3-88 2. கே பாரஸ்மல் ஜெயின் 37 கந்தன்தெரு சென்னை-30 (1-4-86 முதல் 31-12-86முடிய)ஏலத்தேதி4-3-88 3.எம் ஹஸ்முக்குமார் 7/5 கல்மண்டபம் ரோடு சென்னை-13(1-6-86 முதல் 20-12-86முடிய) ஏலத்தேதி 7-3-88 4 காந்திலால் சஜ்ஜன்ராஜ் 20 எஸ். வி. கோயில் தெரு சென்னை-1 (1-7-85 முதல் 30-12-86 முடிய) ஏலத்தேதி 11 3 88 5. பி சாந்திலால் ஜெயின் 55-1 வைத்தியநாத முதலி தெரு சென்னை-1 [1-5-86 முதல் 31-12:89 முடிய] ஏலத்தேதி 17-3-88 6. மாங்கிலால் அண்டுகோ 43, அருணாசலம் தெரு சென்னை-2 (1-4-86 முதல் 30-10-86 முடிய) ஏலத்தேதி 17-3-887. யு.சுக்ராம் 8,வி. எம் தெரு சென்னை-14 1-1-86முதல் 1.1.87 முடிய) ஏலத்தேதி 18,3.88

மேற்படி கடைகளில் அடகு வைத்துமீட்கப்படாத பொன், வெள்ளி இதர பொருட்களைமேற்படிதேதிகளில் காலை 10 மணிக்கு மேல் வருவாய்த்துறை அதிகாரிகள் முன்னிலையில் அரசு ஏலதாரர்களான எம். ஜவஹர்லால் போரா அவர்களால் 31, மங்கபதி நாயக்கன் தெரு சிந்தாதிரிப்பேட்டை சென்னை-2 விலாசத்தில் ஏலம் போடப்படும்.

## ஜப்பானில் கடலுக்கு அடியில் ரயில் பாதை

டோக்கியோ, பிப். 25- ஜப்பானில் கடலுக்கு அடியில் 35 மைல் நீளத்துக்கு அதிசய ரயில்பாதை அமைக்கப்பட்டுள்ளது.

மலையைக்குடைந்து ரயில் பாதை அமைத்து இருப்பதைப் பார்த்திருக்கிறோம். ஆனால் கடலுக்கு அடியில் ரயில்பாதை அமைத்து இருக்கும் அதிசயம் ஜப்பானில் நடந்துள்ளது.

ஜப்பானில்உள்ள கொன்சு தீவையும், ஹொக்கைடு என்ற தீவையும் இணைக்கும் விதத்தில் இந்த ரயில் பாதை அமைக்கப்பட்டுள்ளது,

கடலுக்கு அடியில் அமைந்துள்ள இந்தரயில் பாதையின் நீளம் 35 மைல்.

கடலுக்கு அடியில் 335 அடி ஆழத்தில் 'ட்சுகாரு' கடலுக்கு கீழே இந்த ரயில் பாதை அமைக்கப்பட்டுள்ளது

சுமார் 35 அடி அகலம் 25 அடிஉயரம்உள்ளஇந்தபாதையைக்கட்டி முடிக்க20 ஆண்டுகள்ஆகி உள்ளன.

இரண்டு தீவுகளையும் ஒன்றாக இணைக்கும் இந்த ரயில்பாதை அமைக்க மொத்தம் 10 ஆயிரம் கோடி ரூபாய் செலவு ஆகியுள்ளது

Edited and Published by K. RAVINDRAN on be healf of Thanga-mani publications and printed by all India Anna D.M.K. Perarignar Anna Trust Press at 34, NelsonManickam Road, Madras-600 029.

# புரட்சி மலர்கள்

டாக்டர் கா.காளிமுத்து

## காங்கிரஸ் கலாச்சாரம்

**இந்தியக் குடியரசுத் துணைத் தலைவர்! டெல்லி மேல்சபைத் தலைவர்!**

**அறிவாற்றலும்,கண்ணியமும் மிக்கவர் என்று அனைவராலும் பாராட்டப்படுபவர் சங்கர் தயாள் சர்மா!**

அவருக்கு இரத்தக்கொதிப்புஏற்பட்டது! பதவி விலகவும் முன் வந்தார்! காரணம் எதிர்க்கட்சிகள் விளைத்த குழப்பமோ- கலகமோ- பிடிவாதப்போக்கோ அல்ல! அல்லவே அல்ல!

காங்கிரஸ்காரர்களின் தான்தோன்றி நடவடிக்கை! தலைகொழுத்த பேச்சு ஆணவ ஆட்டம்! அவைத் தலைவருக்கே சட்டம் சொல்லித்தர முன்வரும் அதிசப் பிரசங்கித்தனம்! ஆகியவைதான்!

அந்திராவின் கவர்னர் குமுத்பென் ஜோஷியின் ஆடம்பரச் செலவுகள் பற்றிப் பேச உபேந்திரா எழுந்தார்!

கவர்னர் பற்றிப் பேசக்கூடாது- சட்டப்படி தவறு என்றது காங்கிரஸ் சட்டப்படி முறையானது என்றார் சர்மா?

இல்லை என்றார் இந்தியாவின் இணையற்ற சட்ட மேதையாகத் தன்னைக் கருதிக கொண்டிருக்கும் கால் வேக்காடடுச் சிதம்பரம்

சட்டம் பற்றித் தவறான விளக்கம் சொன்ன சாம்பிராணி சிதம்பரம் அவைத் தலைவரின் அனுமதி பெற்று எழுந்து கூடச் சொல்லவில்லை. உட்கார்ந்து கொண்டே பேசினார்!குடியரசுத் துணைத்தலைவரை விடக் கொலுமண்டபத்துக்கு வேண்டியவர் என்ற மனப்போக்கால்!

**"நீபிறக்கும் முன்பே-அரசியல் சட்டத்தை மனனம் செய்தவன் நான். அமைச்சராக இல்லாவிட்டால் உன்னை வெளியேற்றி இருப்பேன்" என்று குமுறினார் குடியரசுத் துணைத் தலைவர்.**

**குடியரசுத் துணைத்தலைவரே- ஆத்திரப்படுமளவுக்கு கொம்பேறி மூக்கனாக இருப்பவர்-மத்தியமந்திரியாக இருப்பது தமிழ்நாட்டுக்கே அவமானம்!**

காங்கிரஸ்காரர்களின் நடவடிக்கை குடியரசுத் துணைத்தலைவருக்கே கனலை ஏற்றியிருக்கிறது! என்னை விட்டுவிடுங்கள்! விலகி விடுகிறேன் எனும் அளவுக்கு-சர்மா சங்கடப்படுகிறார்.

இவ்வளவு சங்கடத்துக்கும் ஊற்றுக்கால் எது என்பதை - எதிர்க்கட்சித் தலைவர் 11 பேரின் கூட்டறிக்கை புலப்படுத்துகிறது தலைமைப் பீடமே காங்கிரஸ்காரர்களை

**குடியரசுத் துணைத்தலைவரின் முடிவுக்கு மாறாகக் குழப்பம் செய்ய தூண்டியிருக்கிறது என்பது தான் அவர்கள் குற்றச்சாட்டு.**

**இந்தியாவின் தலை நகரில் நடைபெறும் தலையாய மேலவையில் குடியரசுத்துணைத் தலைவரே-அவைத் தலைவராக இருக்கும் அவையில் குழப்பம் விளைவிக்கிற காங்கிரஸ்-தமிழக சட்ட சபையில் விளைவித்த குழப்பத்தை-'இல்லை'எனமறுக்க நல்லோர்க்கு நா எழுமா?**

நாடாளுமன்ற காங்கிரஸ் உறுப்பினர் சட்டசபைக் காவரியிலிருந்து நாற்காலியை வீசியதையும்-பேரவைத் தலைவரின் பேரனைப்போல் அவர் மடியில் காங்கிரஸ் சிறுவன் அமர்ந்ததையும்-வன்முறையைக் காங்கிரசே தொடங்கி வைத்ததையும்-நம்ப மறுத்தவர்களின் அறிவுக்கண்களை - குடியரசுத் துணைத்தலைவரே திறந்து வைக்கிறார்.

**நாடாளுமன்ற மேலவையில்-பிரதமரின் ஆசியோடு-குழப்பம் செய்யும் காங்கிரஸ்காரர்கள் மாநிலசட்டப் பேரவைகளில் என்னதான் செய்ய மாட்டார்கள்? மலையையே விழுங்குகிற மகாதேவனுக்கு கதவு அப்பளம் தானே?**

சபாநாயகரோ-அல்லது நாடாளுமன்ற மேலவைத்தலைவரோ தங்கள் விருப்பப்படி ஆடும் பொம்மையாக இருக்கவேண்டும். காங்கிரஸ்காரர்கள் காக்கை வெள்ளை என்றால் அதை நிலைநாட்ட அவைத்தலைவர் அரசியல் சட்ட வியாக்கியானம் தர வேண்டும். மறுத்தால் அவருக்கு"இரத்தக்கொதிப்பு" வரவைப்பார்கள்! விலகிவிடும் நிலையில் கொண்டு போய் நிறுத்துவார்கள்!

**இதுதான் 'காங்கிரஸ் கலாச்சாரம்"**

**அகிம்சை போதித்த அண்ணலின் காங்கிரஸ்- நாற்காலி வீசுவதிலும்- ஒலி பெருக்கிகளை உடைப்பதிலும் 'கருப்பு பெல்ட்' பெற்று காந்தீயத்துக்குப் புது விளக்கம் தருகிறாகள்!**

சர்வாதிகார எண்ணம்-இந்தியாவில் அனைத்துக் காங்கிரஸ் காரார்களுக்கும் ஏற்பட்டுவிட்டதன் அறிகுறிகள் தான்-டிசம்பர் 28ல் சட்டசபையில் அவர்களின் போக்கும் இப்போது டெல்லி மேலவையில் அவர்கள் அரங்கேற்றிய குழப்பக்காதையும்ர்

**காங்கிரஸ்காரர்களின் இந்தப்போக்கைத் தொடர்ந்து அனுமதித்தால்- இடுப்பொடிந்த காங்கிரஸ் காரன் கூடஇட்லரக மாறிக் கொட்ட மடிக்கத்தொடங்கி விடுவான்!**

தமிழகத்து மண்ணிலே மட்டுமல்ல- இந்தியத் துணைக் கண்டம் முழுமையிலுமிருந்தே-காங்கிரசை ஒழித்துகட்டுவது தான்-காந்தி அஞ்சலியாக இருக்க முடியும்!

**இல்லாவிட்டால்-புத்தபிட்சுக்கள் இரத்த பிட்சுக்களாக இலங்கையில் மாறியது போல் காந்தியத்துக்கே காங்கிரசார் களங்கம் சேர்த்து விடுவார்கள்**

காந்தி சிலைக்கு கடா வெட்டி பொங்கல் வைக்கிற அளவுக்குப்போய் அந்தப்புனிதனின் பெயரையே காங்கிரசார் மாசுபடுத்தும் நிலை நேரிடும்!

**காங்கிரசை அகற்றுவோம்! அங்கிங்கெனாதபடி எங்கும் அகற்றுவோம்! இதுவே-இந்தியத் துணைக் கண்ட மக்கள் ஏற்றிட வேண்டிய ஜனநாயக சபதம்!**

### சிதம்பரம் ஜெயராமன் கவலைக்கிடம்

சென்னை, பிப். 25- பழம்பெரும் சினிமா பின்னணி பாடகர் சி. எஸ். ஜெயராமன் மயங்கிய நிலையில் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டார் அவரது உடல் நிலை கவலைக்கிடமாக உள்ளது பராசக்தி. பாவைவிளக்கு, புதையல்' புதுமைப்பித்தன், தெய்வப் பிறவி உள்பட ஏராளமான படங்களில் பின்னணி பாடியவர் சி. எஸ். ஜெயராமன் அவர் ரத்த அழுத்தம், சர்க்கரைவியாதி காரணமாக மயங்கி விழுந்தார். உடனே அவர் சென்னை பெரிய ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டுள்ளார் அவரது உடல் நிலை கவலைக்கிடமாக உள்ளது என்று டாக்டர்கள் தெரிவித்துள்ளனர்.

### விபத்தில் காயமடைந்த கழகத்தவர்க்கு ஆறுதல்

திண்டுக்கல், பிப். 25- மதுரைவந்த அன்னைஜானகி எம்ஜிஆர் நிகழ்ச்சியில் பங்கேற்று திண்டுக்கல் திரும்பும் வழியில் வேன் ஒன்று விபத்துக்குள்ளானது.

இந்த வேனில் திண்டுக்கல் 32வது வட்டத்தைச் சேர்ந்த பி.அய்யாச்சாமி எஸ் பி எம் எஸ் புதூர் பாவா, சேக் மைதீன், அப்துல் சேட், அல்லாபிச்சை சக்திவேலு முத்துராம் பெரியண்ணன், ஹக்கீம் ராமர் ஆகியோர் பயணம் செய்தனர்.

அனைவருக்கும் காயம் ஏற்பட்டது அனைவரும் திண்டுக்கல் மருத்துவ மனையில் சிகிச்சை பெற்று வருகின்றனர்.

முன்னாள் துணை சபாநாயகர் வி. பி. பாலசுப்பிரமணியம், ரெட்டியார் சத்திரம் ஒன்றியம் செயலாளர்பி.கே.சண்முகம் ஆத்தூர் குமரேசன் வா.சிவநாத்பாபு, 21வது வட்டம் குணசேகரன் மற்றும் கழகத் தோழர்கள் மருத்துவ மனையிலுள்ளகழகத்தோழர்களை சென்று பார்த்தனர்.

### எஸ்எஸ்சித்து- பொது மக்கள் சந்திப்பு

சென்னை, பிப். 25- தமிழக ஆளுநரின் ஆலோசகர் டாக்டர் எஸ்.எஸ்.சித்து பொதுமக்களையும் அலுவலக சார்பற்றவர்களையும்மற்றும் பிரதிநிதிகளையும் தன் அலுவலகத்தில் எல்லா வேலை நாட்களிலும் மாலை 3.00 மணி முதல் 4.00 மணிவரை சந்திப்பார்

### தண்ணீர் விட கிணத்துக்கடவு மக்கள் கோரிக்கை

கோவை, பிப், 25- கிணத்துக் கடவு தொகுதி புளியம்பட்டி, செங்குட்டு பாளையம், கோயில்பாளையம் வடசித்தூர், மற்றும் பொங்கலூர் ஆகிய தொகுதியிலுள்ள வாய்க்கால்களில் தண்ணீர் திறந்துவிடக்கோரி முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் கே.வி கந்தசாமி சென்னையில் தலைமைச் செயலாளரிடம் மனுக்கொடுத்தார்.

மேலும் இப்பகுதிமக்களின் குடிநீர் பற்றாக்குறையை தேவையைப் போக்குவதற்கும் ஏற்பாடு செய்ய வேண்டும் என்றும் கே.வி. கந்தசாமிகோரிக்கை விடுத்தார்,